## அச்சப்பத்து.

ஆனந்தமுறுதல்.

தில்லையி லருளிச்செய்யப்பட்டது.

ஆசிரியவிருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

புற்றில்வாளரவுமஞ்சேன்
பொய்யர்தம்மெய்யுமஞ்சேன்
கற்றைவார்சடையெம்மண்ணல்
கண்ணுதல்பாதநண்ணி
மற்றுமோர்தெய்வந்தன்னை
யுண்டெனநினைந்தெம்பெம்மாற்
கற்றிலாதவரைக்கண்டா
லம்மநாமஞ்சுமாறே.

## திருப்பாண்டிப் பதிகம்.

சிவானந்தவிளைவு.

திருப்பெருந்துறையி லருளிச்செய்யப்பட்டது.

கட்டளைக்கலித்துறை.

திருச்சிற்றம்பலம்.

பருவரைமங்கைதன்பங்கரைப்பாண்டியற்காரமுதா
மொருவரையொன்றுமிலாதவரைக்கழற்போதிறைஞ்சித்
தெரிவரநின்றுருக்கிப்பரிமேற்கொண்டசேவகனை
னொருவரையன்றி யுருவறியாதென்றனுள்ளமதே.

சதுரைமறந்தறிமால்கொள்வர்சார்ந்தவர்சாற்றிச்சொன்னோங்
கதிரைமறைத்தன்னசோதிகழுக்கடைகைப்பிடித்துக்
குதிரையின் மேல்வந்துகூடிடுமேற்குடிகேடுகண்டீர்
மதுரையர்மன்னன்மறுபிறப்போடமறித்திடுமே.

## 62

## குலாப்பத்து

அநுபவமிடையீடுபடாமை.

தில்லையிலருளிச்செய்யப்பட்டது.

கொச்சகக்கலிப்பா

திருச்சிற்றம்பலம்.

ஒடுங்கவந்தியுமே யுறவென்றிட்டுள்கசிந்து
தேடும்பொருளுஞ் சிவன்கழலேயெனத்தெளிந்து
கூடுமுயிருங்குமண்டையிடக்குனித்தடியே
னாடுங்குலாத்தில்லையாண்டானைக்கொண்டன்றே.

## அற்புதப்பத்து

அநுபவமாற்றாமை

திருப்பெருந்துறையி லருளிச் செய்யப்பட்டது.

ஆசிரிய விருத்தம்.

திருச்சிற்றம்பலம்.

மையலாய்இந்தமண்ணிடைவாழ்கெனு
மாழியுளகப்பட்டுத்
தையலாரெனுஞ்சுழித்தலைப்பட்டுநான்
றலைதடுமாறாமே
பொய்யெலாம்விடத்திருவருடந்துதன்
பொன்னடியிணைகாட்டி
மெய்யனாய்வெளிகாட்டிமுன்னின்றதோ
ரற்புதம்விளம்பேனே.

திருச்சிற்றம்பலம்.

63

## திருவார்த்தை.

அறிவித்தன்புறுதல்.

திருப்பெருந்துறையி லருளிச்செய்யப்பட்டது.

ஆசிரிய விருத்தம்

திருச்சிற்றம்பலம்.

மாதிவர்பாகன்மறைபயின்ற
வாசகன்மாமலர்மேயசோதி
கோதிலபரங்கருணையடியார்
குலாவுநீதிகுணமாக நல்கும்
போதலர்சோலைப்பெருந்துறையெம்
புண்ணியன்மண்ணிடைவந்திழிந்
தாதிப்பிரமம்வெளிப்படுத்த
வருளறிவாரெம்பிரானாவாரே.

## திருவெண்பா.

அணைந்தோர்தன்மை.

திருப்பெருந்துறையிலருளிச்செய்யப்பட்டது.

நேரிசை வெண்பா.

திருச்சிற்றம்பலம்.

வெய்யவினையிரண்டும்வெந்தகலமெய்யுருகிப்
பொய்யும்பொடியாகாதென்செய்கேன் செய்ய
திருவார்பெருந்துறையான்றேனுந்துசெந்தீ
மருவாதிருந்தேன்மனத்து.

திருச்சிற்றம்பலம்.

## பண்டாய நான்மறை.

அநுபவத்துக்கையமின்மையுரைத்தல்.

திருப்பெருந்துறையி லருளிச்செய்யப்பட்டது.

நேரிசை வெண்பா.

திருச்சிற்றம்பலம்.

பண்டாயநான்மறையும் பாலணுகாமாலயனுங்
கண்டாருமில்லைக்கடையேனைத்—தொண்டாகக்
கொண்டருளுங்கோகழியெங்கோமாற்குநெஞ்சமே
யுண்டாமோகைம்மாறுரை.

## திருவிசைப்பா.

திருமாளிகைத்தேவர் அருளிச்செய்யப்பட்டது.

பண் பஞ்சமம்.

ஒளிவளர்விளக்கே யுலப்பிலாவொன்றே
யுணர்வுசூழ்கடந்ததோருணர்வே
தெளிவளர்பளிங்கின்றிரண்மணிக்குன்றே
சித்தத்துட்டித்திக்குந்தேனே
யளிவளருள்ளத்தானந்தக்கனியே
யம்பலமாடரங்காக
வெளிவளர்தெய்வக்கூத்துகந்தாயைத்
தொண்டனேன்விளம்புமாவிளம்பே.

## திருநாவுக்கரசு நாயனார். (பெ. பு.

அண்ணலேயெனையாண்டுகொண்டருளியவமுதே
விண்ணிலேமறைந்தருள்புரிவேதநாயகனே
கண்ணினாற்றிருக்கயிலையிலிருந்தநின்கோல
நண்ணிநான்றொழுநயந்தருள்புரியெனப்பணிந்தார்;

## காரைக்காலம்மையார். (பெ. பு)

இறவாதவின்பவன்புவேண்டிப்பின்வேண்டுகின்றார்
பிறவாமைவேண்டுமீண்டும் பிறப்புண்டேலுன்னையென்று
மறவாமைவேண்டுமின்னும் வேண்டுநான்மகிழ்ந்துபாடி
யறவாநீயாடும்போதுன்னடியின்கீழிருக்கவென்றார்.

## திருப்பல்லாண்டு.

சேந்தனார் அருளிச்செய்யப்பட்டது.

மன்னுகதில்லைவளர்கநம்பத்தர்கள்வஞ்சகர்போயகலப் [ங்க
பொன்னின்செய்மண்டபத்துள்ளேபுகுந்துபுவனியெல்லாம்விள
வன்னநடைமடவாளுமைகோனடியோமுக்கருள்புரிந்து
பின்னைப்பிறவியறுக்கநெறிதந்தபித்தற்குப்பல்லாண்டுகூறுதுமே.

பாலுக்குப்பாலகன்வேண்டியழுதிடப்பாற்கடலீந்தபிரான்
மாலுக்குச்சக்கரமன்றருள்செய்தவன்மன்னியதில்லைதன்னு
ளாலிக்குமந்தணர்வாழ்கின்றசிற்றம்பலமேயிடமாகப்
பாலித்துநட்டம்பயிலவல்லானுக்கேபல்லாண்டுகூறுதுமே.

## சமயகுரவர் திருநக்ஷத்திரம்.

சித்திரைச்சதயமப்பர் சிறந்தவைகாசிமூல
மத்தரைப்பணிசம்பந்தராணி மாமகத்திலந்த
முத்தமிழ்வாதவூரர் முதியநல்லாடிதன்னிற்
சுத்தமாஞ்சோதி நாளிற்சுந்தரர்கைலைசேர்ந்தார்.

## பெரியபுராணச்செய்யுள்.

கற்பனைகடந்தசோதிகருணையேயுருவமாகி
யற்புதக்கோலநீடியருமறைச்சிரத்தின்மேலாஞ்
சிற்பரவியோமமாகுந்திருச்சிற்றம்பலத்துணின்று